ரூ. 3.50

திருவள்ளுவராண்டு 2037
மாசி - பிப்ரவரி 2006

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

தமிழ்ச் சான்றோர்களைப் போற்றி அஞ்சல்தலை வெளியிட்டுச் சிறப்பித்த இந்திய அரசுக்கு எங்கள் நன்றி.











சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| திருவள்ளுவராண்டு 2037 (பார்த்திப) | மாதம் : மாசி |
| --- | --- |
| மலர் : 19 | இதழ் : 2 |





# மனிதப் புனிதராய் ஒளி வீசுவோம்!

"காக்கைச் சிறகினிலே நந்த லாலா! – நின்றன்
கரிய நிறம் தோன்றுதையே நந்தலாலா!
பார்க்கும் மரங்களெல்லாம் நந்தலாலா – நின்றன்
பச்சை நிறம் தோன்றுதையே நந்தலாலா!"

என்று பாடினான் பாரதி! காகத்தின் கருமையிலும் பரந்த வெளியின் பசுமையிலும் இறைமையைத் தரிசித்தான்! அன்பு வழிப்பட்ட பார்வையில் அருள் காட்சி தரும்! எல்லா உயிர்களிலும் இறையருள் நிரம்பி வழிவதை உணர்ந்து தரிசித்து இன்பம் எய்த முடியும். இயல்பான நம் மானுடப் பார்வை குறைபாடுகள் உடையது. நிலைக் கண்ணாடியில் நம் தோற்றம் நமக்கு அழகாய்த் தெரியும்! வசந்தம் கடந்து இலையுதிர்க்காலம் வந்துவிட்டாலும் என்றும் இளமையாய்க் காட்சி தரும். உலகில் நம்மை நேசிக்கின்ற முதல் மனிதர் நாம்தான்! அதனால்தான் உருவம் காட்டும் கண்ணாடியில் நாம் குற்றமற்றவராகக் காட்சி தருவோம்! நம் விழிகளுக்கு நம் குறைகளைப் பார்க்கும் திறன் கிடையாது. நம் ஆடையின் அழுக்கு நமக்குத் தெரியாது. எதிரே இருப்பவரின் ஆடையில் கறையிருந்தால் உருப்பெருக்கிக் கண்ணாடி வைத்துப் பார்ப்பது போல் பெரிதாய்த் தெரியும்.

ஒரு ரொட்டிக் கடைக்காரர், தன் நண்பராய் இருக்கிற வெண்ணெய்க் கடைக்காரர் மீது வழக்குப் போட்டார். என்ன வழக்கு? தான் தினந்தோறும் நண்பரின் வெண்ணெய்க் கடையில் வாங்குகின்ற அரைகிலோ வெண்ணெயில் 50 கிராம் குறைவாக உள்ளது என்று! வழக்கை விசாரித்த நீதிபதி கடும் கோபமாக, தினந்தோறும் அரைகிலோ வெண்ணெய்க்கு 50 கிராம் குறைவாகத் தரலாமா என்று கேட்க, வெண்ணெய்க் கடைக்காரர் விளக்கம் அளிக்கின்றார்! "ஐயா! நான் படிக்காதவன், என் கடையில் அரை கிலோ எடைக்கு என், ஏடைக்கல் இல்லை! நான் தினந்தோறும் இவர் கடையில் வாங்குகின்ற ரொட்டியில் அரைகிலோ எடை எனப் போட்டிருக்கும். அதை வைத்துத்தான் அரைகிலோ வெண்ணெய் நிறுத்துத் தருகின்றேன். இப்பொழுது வைத்து நிறுத்துப் பார்த்தால் என் வெண்ணெயும் இந்த ரொட்டியின் எடையும் சரியாக இருக்கும்" என்றார். தான் 50 கிராம் ரொட்டியைக் குறைவாகக் கொடுத்துவிட்டு வெண்ணைய்க் கடைக்காரர் மீது பழிபோட்ட ரொட்டிக் கடைக்காரரின் தராசினைப் போலத்தான் நம் மனத்தின் நியாயத் தராசு செயல்படுகிறது!

ஒரு தொடர் வண்டியில் (இரயிலில்) முதல் வகுப்புப் பெட்டியில் ஒரு பயணி புகைபிடித்துக் கொண்டே பயணம் செய்தார். அந்த முதல் வகுப்புப் பெட்டியில் பயணம் செய்த சகபயணி, புகைபிடிப்பதைக் கண்டித்தார். புகைபிடிப்பவரோ மிகவும் கோபமாக புகைபிடிப்பது தம் உரிமை என்று அவர்மீது பாயும் நிலையில் சண்டை போட்டார். பக்கத்தில் கொஞ்சம் தூரத்திலிருந்த இருக்கையில் இருந்த இந்த நிகழ்ச்சியைக் கவனித்த பயணி ஒருவர் கோபமாகச் சண்டைபோடும் புகைபிடிக்கும் பயணியிடம் கூறினார்,

"நீங்கள் இரண்டு தவற்றினைச் செய்கிறீர்கள்!

முதலாவது, தொடர்வண்டியின் பொது இடத்தில் புகைக்கக் கூடாது என்ற விதியை மீறிப் புகைக்கிறீர்கள். சக பணிகளுக்குத் தொல்லை தருகின்றீர்கள்.

இரண்டாவது முக்கிய தவறு, இரண்டாம் வகுப்புச் சீட்டு வைத்துக் கொண்டு முதல் வகுப்புப் பெட்டியில் பயணம் செய்கிறீர்கள். இப்பொழுதே பயணச்சீட்டு ஆய்வரை அழைக்கின்றேன்"

என்று சொன்னார். அந்தப் பயணி கூறியதுதான் தாமதம், கோபமாகப் படம் எடுத்து ஆடிய புகைபிடித்த பயணி தன் பெட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு பெட்டிப் பாம்பாய் இரண்டாம் வகுப்புக்குப் பயணம் ஆனார். இரண்டு மணி நேரம் கழித்துப் புகைவண்டி நின்றவுடன் புகைபிடித்த பயணியும் அவரை எச்சரித்த பயணியும் இறங்கிச் சென்றனர். அப்பொழுது புகைபிடித்த பயணி வேகமாகத் தன்னை எச்சரித்த பயணியிடம் தான் இரண்டாம் வகுப்புச் சீட்டு வைத்திருப்பது எப்படி உங்களுக்குத் தெரியும் என்று கேட்டார். அதற்கு அந்தச் சகபயணி சொன்னார் : "உங்கள் பக்கத்து இருக்கைப் பயணியோடு கோபமாகக் கையைக் காலை ஆட்டிப் பேசும் போது தங்கள் சட்டைப்பையில் இருந்து சிவப்பு நிறமான சீட்டு வெளியே விழும் நிலையில் இருந்தது. இந்த நிறப் பயணச் சீட்டுதான் நானும் வைத்திருந்தேன். இதிலிருந்து நீங்கள் இரண்டாம் வகுப்புப் பயணச் சீட்டுதான் வைத்திருக்கிறீர்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன்" என்றார்.

திருடனின் பார்வையில் எதிரே வருபவர் எல்லாம் காவலர்களாகத் தெரிவார்கள். "அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்பது பழமொழி! நம் மனதில் ஒரு நியாயத் தராசு எப்பொழுதும் நம் செயல்களை எடை போடட்டும்! அந்த நியாயத் தராசு விருப்பு - வெறுப்புகளின் சார்பு இன்றி, பந்த பாசங்கள் என்று சாய்ந்து விடாமல் நியாயத்தின் நேர்முள்ளை என்றும் உயர்த்திப் பிடிக்கட்டும்! அப்பொழுதுதான், நம் மனக் கோணல்கள் சரியாகும்! நாம் மனிதப் புனிதராய் ஒளிவீசுவோம்!

பொன்னம்பல அடிகளார்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 60. ஊக்கமுடைமை

உள்ளத்தின் எழுச்சியே ஊக்கமுடைமை. அதாவது வாழ்தல் விருப்பத்தின் வழிப்பட்ட ஆள்வினையுடன் உள்ளக் கிளர்ச்சியுடன் எழுச்சியுடன் ஈடுபடுதல் ஊக்கமுடைமை.

*உடையர் எனப்படுவது ஊக்கம் அஃதுஇல்லார்*
*உடையது உடையரோ மற்று.* (591)

ஊக்கம் உடையார் எல்லாவற்றையும் உடைமையாகப் பெற்றுள்ளார் என்று சொல்லப்பெறுவார். ஊக்கம் இல்லாதவர் வேறு எதனை உடைமையாகப் பெற்றிருந்தாலும் உடைமை பெற்றவராகக் கருதப்பெறமாட்டார்.

உள்ள எழுச்சியாகிய ஊக்கம் பெற்றிருந்தால் அஃது எல்லா உடைமைகளையும் பெற்றது போல என்று கூறினார். காரணம் ஊக்கமுடையார் எதனையும் அடைய முடியும் என்ற நம்பிக்கை.

ஊக்கமில்லாதார் உடைமைகளைப் பெற்றிருந்தாலும் பெற்றிருப்பதாகக் கருதப்பட மாட்டார் ஏன்? அப்பொருளைப் பேணிக் காக்கும் திறன் அவருக்கு இருக்காது என்பது அனுபவ உண்மை. உழைப்பால் வந்த பொருளே பொருள்.

*உள்ளம் உடைமை உடைமை பொருள்உடைமை*
*நில்லாது நீங்கி விடும்.* (592)

ஊக்கம் உடைமையே உடைமை. பொருளுடைமை நில்லாது நீங்கிவிடும்.

ஊக்கம் உடையோர் பொருளாட்சி பெறுதல் உறுதி என்பதால் "ஊக்கம் உடைமை உடைமை" என்றார்.

ஊக்கமில்லாதார் பொருளுடைமையைக் குறுக்கு வழிகளாலும் சமுதாய விபத்துக்களாலும் அடைந்து விடுதல் உண்டு. ஆயினும் அவர்களுக்கு அந்தப் பொருளைக் காப்பாற்றிக் கொள்ளும் திறன் இருக்காது.

*ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவார் ஊக்கம்*
*ஒருவந்தம் கைத்துடை யார்.* (593)

ஊக்கத்தை உயர்நிலை உடைமையாகப் பெற்றவர்கள் இழந்த செல்வத்திற்காக அழமாட்டார்கள்

அவர்கள் பெற்றிருந்த செல்வந்தான் போயிற்றே தவிர அவர்களுடைய செல்வத்திற்குக் காரணமாக இருந்த ஊக்கத்தை ஒருபோதும் இழக்கமாட்டார்கள்.

அதனால் திரும்பவும் செல்வத்தைப் பெறுவர் என்பது உறுதி.

*ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா*
*ஊக்கம் உடையான் உழை.* (594)

அசைவிலாத ஊக்கத்தைப் பெற்றவனின் முகவரியைக் கேட்டுக் கொண்டு செல்வம் அவனிடம் போய்ச் சேரும்.

'அசைவிலா ஊக்கம்" என்பது, முயற்சியின்கண் வரும் தடைகளை இடையூறுகளைப் பொருட்படுத்தாது தொடர்ந்து முயற்சியில் ஈடுபடும் உளப்பாங்கு.

*வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்*
*உள்ளத்து அனையது உயர்வு.* (595)

குளத்தில் நிறைந்துள்ள தண்ணீரின் அளவினதாக இருக்கும் தாமரையின் (நீர்ப்பூவின்) நீளம். அதுபோலச் சமுதாயத்தின் உள்ளப்பாங்கின் அளவுக்கு மானிடரின் உயர்வு இருக்கும்.

எந்த ஒரு பொருளும் தன் நிலையில் உயர்வதில்லை; வாழ்வதில்லை. குளத்தின்கண் வளரும் தாமரை வளர்ச்சிக்குத் தண்ணீர் துணை செய்யும், தண்ணீர் அளவு உயரவில்லையானால் வளராது. வளர முடியாது. இது தாமரையின் குற்றமன்று. அதுபோல மக்கட் சமுதாயத்தின் உளப்பாங்கு ஊக்கத்தின்பாற்பட்டதாக நிற்பின் ஆங்கு வாழும் தனி மனிதனும் ஊக்கத்துடன் உழைப்பான்.

அங்ஙனமின்றி மக்கட் சமுதாயம் சுரண்டலுக்கும், ஆரவாரத்திற்கும், பொய்ம்மைக்கும் மதிப்புக் கொடுத்து ஊக்கத்தைப் புறக்கணிக்குமாயின் மனிதனிடத்தில் ஊக்கம் வளராது. இது அவன் குறையல்ல; மக்கட் சமுதாயத்தின் குறையேயாகும்.

*உள்ளுவது எல்லாம் உயர்வுஉள்ளல் மற்றுஅது*
*தள்ளினும் தள்ளாமை நீர்த்து.* (596)

நினைப்பது எல்லாம் உயர்வுகளையே நினைத்திடுக. இங்ஙனம் நினைக்கப்பெறும் உயர்வு வாராதொழியினும் வந்தது போலக் கருதப்பெறும்.

எப்போதும் வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டவர்கள் எளிதான ஒன்றை இலக்காக எண்ண மாட்டார்கள். மிக உயர்ந்த ஒன்றையே இலக்காக எண்ணுவர். இங்ஙனம் எண்ணப்பெறும் உயர் குறிக்கோள் கை கூடாது போனாலும் கைகூடியது போலவே கருதப் பெறும். ஊக்கமுடையோர் ஒன்றினைக் குறிக்கோளாக ஏற்பின்.

*சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பின்*
*பட்டுப்பாடு ஊன்றுங் களிறு.* (597)

களிறு இரும்புத்தளையால் கட்டப்பெற்றாலும் தன் முயற்சியில் குன்றாது. அதுபோலவே ஊக்கம் உடையோர் தம் பெருமைக்குச் சிதைவு ஏற்பட்டாலும் தளராது முயன்று தன் பெருமையை நிலைநாட்டுவர்.

ஊக்கமுடையோரின் முயற்சியை இடர்ப்பாடுகள் நிறுத்தா; பின் வாங்கச் செய்யா என்பது கருத்து.

*உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து*
*வள்ளியம் என்னும் செருக்கு.* (598)

ஊக்கமில்லாதவர்கள், உலகத்தில் எப்பொழுதும் வண்மையுடையேம் என்ற பொருமையை அடைய இயலாது.

மற்றவர்களுக்கு வழங்கும் வள்ளன்மை, தடையின்றித் தொடர்ந்து நீடிக்க வேண்டுமாயின் பொருளீட்டத்திற்குரிய ஊக்கம் இன்றியமையாதது என்று உணர்த்தியது.

*பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை*
*வெரூஉம் புலிதாக் குறின்.* (599)

யானை பெரிய உடலை உடையது; கூரிய கொம்புகளை உடையது, ஆயினும் ஊக்கமில்லாமையின் காரணமாகச் சிறிய புலிக்கும் அஞ்சி நிற்கும்.

கருவிகளால் அமைவதன்று ஆளுமை. ஊக்கத்தினாலேயே அமையும் என்பது கருத்து.

*உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கைஅஃது இல்லார்*
*மரம்மக்கள் ஆதலே வேறு.* (600)

ஒருவருடைய உண்மையான செல்வம் ஊக்கமே. ஊக்கமில்லாதார் மக்களேயல்லர்; மரங்களை அனையர்.

ஊக்கமில்லாதாரை மரம் என்று இழித்தல் அறிவியலுக்கு உடன்பாடுடையதல்ல.

மரம் சூழ்நிலைகளுக்குத் தாக்குப்பிடித்து நின்று வளர்ந்து பயன்தருவது அறிக.

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.**சாமி. தியாகராசன்**)

நாடாள வேண்டிய அண்ணன் காடாளச் சென்றதைத் தாங்க முடியாத தம்பி பரதன் அவனை அழைத்து வர அயோத்தி விட்டுப் புறப்படுகின்றான். அவன் தடுத்தும் கேளாமல் அவனுடன் நால்வகைப் படைகளும் புறப்படுகின்றன. புறப்பட்ட படைவீரர்கள் பல பத்திகளாகத் தங்கள் பயிற்சிக்குத் தக்கவாறு பிரிந்து நிற்கின்றனர். நிற்கும் அவர்கள் கையில் தோல் கருவிகளும் துளைக் கருவிகளும் முறைப்படி உள்ளன. அவற்றை உடன் கொண்டு அவ்வீரர்கள் செல்லுகின்றனர். அவ்வாறு செல்லும் வீரர்களின் கைகளில் உள்ள கருவிகள் ஒலி எழுப்பவில்லை. வாளா செல்கின்றன. ஏன்? பரதன் புறப்பாடு. வீரம் கருதியோ மகிழ்ச்சி கருதியோ அன்று. மாறானது. மௌனமே குடிகொண்டது. ஆயிரக் கணக்கான வீரர்கள் பல பத்திகளாகப் பிரிந்து சென்றாலும் அங்கே ஓசை இல்லை. ஒலி இல்லை. இந்தக் காட்சி "சுவரில் சித்திரமாக எழுதப்பட்டுள்ள நீண்ட படைகளின் பத்தியைப் போல் உள்ளது" என்கின்றார் கம்பர். அவர் வரைந்து காட்டும் சித்திரச் செய்யுள் இதுதான்.

"மத்தள முதலிய வயங்கு பல்லியம்
ஒத்தன சேறலின் உரையி லாமையின்
சித்திரச் சுவர்நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்ததப் படையின் ஈட்டமே"

-அயோத்தியா காண்டம். ஆறுசெல்படலம் 49.

இராவணனுடைய இலங்கை நகரத்திலும் சரி, அவனுடைய அரண்மனையிலும் சரி வேலைக்காரர்கள் தேவர்களே. தன்னிடத்து உள்ள வேலைக்காரர்கள் தேவர்கள் தான் என்று அனைவரும் அறிந்து கொள்ளும் வண்ணம் இராவணன் இட்டிருந்த கட்டளை ஒன்று உண்டு. தேவர்கள் தங்கள் உலகத்தில் தேவர்களாக இருந்தபோது எந்தவிதமான

ஆடை அணிகலன்களை அணிந்து அலங்காரம் செய்து கொண்டிருந்தார்களோ அதைப் போன்ற அலங்காரத்திலேயே இருந்து கொண்டு பணி செய்ய வேண்டும் என்பதுவே அக்கட்டளை.

இத்தகைய அலங்காரத்தில் இருந்து கொண்டு இட்ட வேலையை வேதனையோடு செய்து கொண்டு வரும் தேவர்கள் இராவணனுடைய அரண்மனையின் பணிப்பொறுப்பினை முறை வைத்துக்கொண்டு செய்து வருகின்றனர். இரவு 8 மணிக்கு ஒரு குழுவின் பணிப் பொறுப்பு முடிகிறது என்றால் அடுத்த குழு மிகச்சரியாக அந்த எட்டு மணியளவில் பொறுப்பேற்க வேண்டும். இல்லையேல் மிகக் கடுமையான தண்டனையை ஏற்க நேரிடும். இந்த முறை வைப்பு ஒழுங்காக நடந்து கொண்டு வருகின்றது.

தருமத்தின் தனிமை தீர்ப்பவனாகிய அஞ்சனை மைந்தன் அனுமன் அரக்கர் ஊருக்குள் நுழைந்து செல்கின்றான். நுழைந்து செல்கின்றான். நுழைந்து ஒளிந்து செல்லும் அனுமனுடைய கண்களுக்கு ஒரு காட்சி கிடைக்கின்றது.

தேவர்களின் குழு ஒன்று ஓரிடத்திலிருந்து புறப்பட்டு இராவணனுடைய அரண்மனையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. அக்குழுவின் வரிசை நேர்த்தியை, ஒழுங்கை அனுமன் மிகுந்த ஆச்சரியத்துடன் பார்க்கின்றான். படைவீரர்களிடம்தான் இத்தகைய வரிசை ஒழுங்கைப் பார்க்க முடியும், பணியாளர்கள் கூட இப்படிச் செல்லும் ஒழுங்கை இங்கேதான் பார்க்கின்றேன் என்று வியந்து நிற்கின்றான். அனுமன் பார்த்த அந்தக் காட்சியை நாமும் பார்த்துப் பரவசப்படும்படிச் செய்துவிடுகிறார் கம்பர்.

இத்தேவர்கள் செல்லும் வரிசையின் நேர்த்தியை விளக்கப் புகும் கம்பனின் திறத்தை வியக்காமல் இருக்க முடியாது. மிக்க பயிற்சி உடைய வீரர்களின் வரிசை போன்று உள்ளது என்றே முதலில் சொல்ல கம்பர் எண்ணியிருக்க வேண்டும். ஆனால் அதல் ஒரு குறை ஏற்படும். படைவீரர்கள் ஒழுங்காக வரிசையாகச் செல்கிறார்கள் என்று நம்மைப் போன்றவர்கள் வேண்டுமானால் வியந்து நிற்கலாம். ஆனால் அப்படை வீரர்களுக்குப் பயிற்சி அளிக்கும் அதிகாரிகள், வரிசையில் நேரிடும் குறையைச் சுட்டிச் சொல்லுவார்கள். அதுபோன்ற ஆற்றல்

அமைந்தவர்களும் குறை சொல்லமுடியாத வரிசை இந்தத் தேவர்களின் வரிசை என்று சொல்லக் கம்பர் ஆசைப்படுகிறார். அவரது ஆசைக்குக் கைகொடுக்கிறது சித்திரம்.

முதல் சித்திரத்தில் கைதேர்ந்த ஓவியன் ஒருவன் படைவீரர்கள் வரிசை வரிசையாகச் செல்லும் பாங்கினை ஓவியமாகத் தீட்டியுள்ளான். நமது கண்கட்கு இனிய காட்சி அது. அவ்வாறு நாம் காணும் அவ்வரிசையிலிருந்து எந்த ஒரு சித்திர வீரனாவது வெளியே வரமுடியுமா? தலையைத் திருப்ப முடியுமா? கால்களை ஒழுங்கின்றி எடுத்து வைக்க முடியுமா? கைகளை ஒழுங்கின்றி வீச முடியுமா? முடியாதே! ஏன் அது சித்திரப்பத்தி. அந்தச் சித்திர வீரர்களின் வரிசை ஒழுங்கு போன்று தேவர்கள் செல்கிறார்கள் என்று ஒரு காவிய ஓவியத்தைக் கம்பனைத் தவிர வேறு யாரால் படைத்துக் காட்ட முடியும்.

இப்படி வியந்து பேசும் அளவில் மிக நேர்த்தியாகச் செல்லும் தேவர்கள் வரிசை சிறிது தூரம் சென்றபின் கலைந்து ஓடுவதாக அடுத்த சித்திரம் எழுதப்பட்டுள்ளது. வரிசை கலைந்து ஓடும் தேவர்கள் எப்படி ஓடுகின்றார்கள்? தங்கள் மார்பில் அணிந்திருக்கும் முத்து மாலைகளும், தலைமுடியில் சூட்டிக்கொண்டுள்ள பூமாலைகளும், தோள்களில் போட்டுக் கொண்டிருக்கும் பட்டு உத்தரீயங்களும் (மேலாடைகள்) கீழே சரிந்துவிழுமாறு ஓடுகின்றார்கள். இப்படி ஓடலாமா இவர்கள்? ஓடக்கூடாதுதான். பத்தியின் ஒழுங்கை மீறுவது தண்டனைக்குரியதா? ஆம். தண்டனைக்குரியதுதான். பின் ஏன் தண்டனையைக் கருதாமல் ஓடுகிறார்கள்? காரணம் உண்டு. என்ன காரணம்?

அரண்மனையில் சென்று பணியை ஏற்க வேண்டிய காலம் குறுகிவிட்டது. செல்ல வேண்டிய இடமோ தொலைவில் உள்ளது. காலம் தாழ்த்திச் சென்றால் மிகக் கடுமையான தண்டனை கிடைக்கும். பத்தியின் ஒழுங்கை மீறினால் கிடைக்கும் ஒறுப்பைக் காட்டிலும் காலத்தாழ்ச்சிக்குக் கிடைக்கும் தண்டனை கடுமையானது என்பதை உணர்ந்தவர்கள் ஆதலால் ஒழுங்கை மீறி ஓடுகின்றார்கள். இராவணன் ஆற்றலை இப்படியும் காட்டமுடியும் என்ற வகையில் சித்திரத்தைப் பயன்படுத்திக் கம்பன் எழுதிக் காட்டியுள்ள நம் நெஞ்சைப் பிணிக்கும் அந்தக் காவியச் சித்திரத்தைக் காண்போம்.

(தொடரும்)

# திருவள்ளுவம் பரவாமைக்குக் காரணங்கள்

(க.ப. அறவாணன், துணைவேந்தர்)

*தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் தலைமையில் புதுக்கோட்டை உலகத் திருக்குறள் பேரவை மாநாட்டில் 22.01.06 அன்று நிகழ்த்திய உரை*

கி.மு. 563-483-ச் சேர்ந்த கௌதம புத்தரின் கருத்துரைகள் இந்திய நாடெங்கும் பரவின. இலங்கை, சீனா, சப்பான் முதலான தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் பரவின. (உலகில் பௌத்த மக்கள் தொகை 372,974,000 பேர்) கன்ஃபூசியசின் (கி.மு.551-479) கருத்துரைகள் சீன நாடெங்கும் பரவியதோடு ஆண்ட அரசினராலும் கடைபிடிக்கப்பட்டன. 1948-இல் சீனா, விடுதலை பெற்றது. அதுவரை சீன மக்களிடையே கன்ஃபூசியஸ் போதனைகள் செல்வாக்கில் இருந்தன. இன்றும் 6,425,300 மக்களிடையே அவர்தம் அறிவுரைகள் போற்றப்பெறுகின்றன. சீனர்கள் வாழும் பல்வேறு உலக நாடுகளிலும் கன்ஃபூசியஸ் கருத்துகள் பரவலாகப் பின்பற்றப்பெறுகின்றன. ஆங்கிலம், பிரெஞ்சு, செர்மன், சப்பான் முதலான அயல்மொழிகளிலும் அவர்தம் கருத்துகள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இயேசு கிறித்துவின் (கி.மு.4 - கி.பி.29) கருத்துகள் அவர் பிறந்த பாலஸ்தீனப் பகுதியில் இருந்து உலகெங்கும் எடுத்துச்செல்லப்பட்டன. இன்று கிறித்துவ நெறியைப் பின்பற்றுவோர் உலகில் 2,069,983,000 பேர் உள்ளனர். கி.பி.570-632-ஐச் சேர்ந்த முகமது நபி கருத்துகள் தொடக்கத்தில் மிகச் சிலரால் மட்டுமே செவிமடுக்கப்பட்டுள்ளன. பின்னர் அரேபியர் வாழும் நாடுகளிலும், ஆப்பிரிக்க-ஆசியக் கண்டங்களிலும் மிகக் கணிசமான மக்களால் (1,254,222,000) போற்றப்படும் கருத்துகளாக அவை செல்வாக்குப் பெற்றுவிட்டன. புத்தர், கன்பூசியஸ், இயேசு, முகமது நபி ஆகியோர் போதனைகளில் வட்டாரச் சார்புகள் (Subjectivity) இருந்தன என்றாலும் அவை உலகத்தில் பரவலாகப் பின்பற்றப்படும் கருத்துக்களாக பரிணமித்துள்ளன. இவற்றிற்குரிய முதன்மையான காரணங்கள் வருமாறு :

1. அன்னோர் கருத்துகளை ஏற்றுப் பரப்பிய அரசர்களும், அரசுகளும்.

2. அன்னோர் காலத்திலும், அவர்க்குப் பின்பும் அவர்தம் கருத்துகளால் கவரப்பட்ட சீடர்களின் கடும் உழைப்பும், பிரசாரமும்.

3. அன்னோர் கருத்துகளை ஏற்றுக்கொண்ட அரசுகளும், அரசர்களும் உலகின் பிற நாடுகளைக் கைப்பற்றி ஆதிக்கம் செய்தமையும், அங்கே, அன்னோர் கருத்துகளைப் பரப்பினமையும், சான்று : கிறித்தவம், இசுலாம்.

இத்தகு வாய்ப்பு திருவள்ளுவத்திற்கு வாய்க்காமை வெளிப்படை. இம்மூன்றும் திருக்குறளுக்கு அமையாமைக்குக் காரணங்கள் அகத்தேயும், புறத்தேயும் அமைந்துள்ளன.

1. அகக்காரணம்

திருவள்ளுவர் தம் திருக்குறள் படைப்பை எதனை நோக்கி எழுதினார், யாரை நோக்கி எழுதினார் என்பன பெரிய வினாக்கள். யாரையும் நோக்காமல் தம் பேரறிவை வெளிப்படுத்தக் கருத்துக்களை நிரல்படுத்தி எழுதினாரா? அவர் கற்றறிந்த கருத்துக்களையும், சிந்தித்த கருத்துக்களையும் ஒருமுகப்படுத்தித் தள்ளுவன தள்ளி, கொள்ளுவன கொண்டு அறம், பொருள், இன்பம் என்று அமைத்தாரா? அரசு, அரசர், சீடர் ஆகியோர் அமையாமை ஒருபக்கம் இருக்க, திருவள்ளுவம் பரவாமைக்குத் தமிழர்க்கே உரிய தன்னடக்க மரபும் காரணமாக இருந்துள்ளது. இத்தமிழர் மரபைச் சித்தர் மரபு என்று நாம் சுட்டலாம். சித்தர்கள் கடவுள், சமயம், மருத்துவம் பற்றிய பலவேறு கருத்துக்களைப் பதிவு செய்துள்ளனர். இக்கருத்துகளை அவர்கள் புத்தர்போலவோ, இயேசு போலவோ, முகமது நபி போலவோ மக்கள் இருக்கும் இடம் தேடியும், நாடியும் எடுத்துச் சென்றதில்லை. தனித்திருந்தும், பசித்திருந்தும், விழித்திருந்தும் தாம் கண்டறிந்த பலவேறு கருத்துகளையும், மருத்துவ முறைகளையும் பதிவு செய்தனர். சான்றாக, பலவேறு இலைகளைக் கொண்டு மூலிகை மருத்துவம் செய்து வந்த அவர்கள் நோய் நீக்கும் அந்த மூலிகைகளையும், அவற்றின் தொழில்

இரகசியத்தையும் (Know how) யாருக்கும் தெரியப்படுத்தவில்லை; பரப்பவுமில்லை. அவற்றை இரகசியங்களாகவே அன்னோர் காத்தனர். கிட்டத்தட்ட அதுபோலவே தாம் சொல்ல விரும்பும் கருத்துக்களையும் பதிவு செய்து பத்திரப்படுத்தினரே அன்றி அவற்றை மக்களிடம் எடுத்துப் பரப்பினதில்லை. தன்னடக்கத்துடன் ஒதுங்கி இருந்தனர். திருவள்ளுவரும், இவ்வாறு கருத்துகளைப் பதிவு செய்ததுடன் அமைதி கொண்டிருக்க வேண்டும். உணர்ந்ததையும், அறிந்ததையும் தாமே பரப்பாமை தமிழ்ச் சித்த மரபாக இருந்தது.

தமிழரிடமும் குறிப்பாகச் சித்தர்களிடமும் தாம் அறிந்த நுட்பங்களைக் கோட்பாடாக்கிச் சந்தைப் படுத்தியதும் (Commercialise) இல்லை. வணிகப் படுத்தியதும் (Marketing) இல்லை. விளம்பரப்படுத்தியதும் இல்லை. இதுவும் ஒரு தமிழ்ச் சித்த மரபாகவே இருந்தது. இத்தகு பழக்கம் வேறுசில முதன்மைத் தளங்களிலும், தமிழர்களிடம் பொதுவாகக் குடிகொண்டிருந்தது. சான்றாகப், பசித்து வருவோர்க்கு அவர் விரும்பும் உணவுகளையும், பண்டங்களையும், பானங்களையும், விலைக்கு வழங்கிக் காசாக்குவது ஆரிய மரபு; ஐரோப்பிய மரபு. அதுவே மிகப்பெரும் விடுதித் தொழிலாக (Hotel Industry) வளர்க்கப்பட்டது. நெடும்பயணம் மேற்கொள்வோரைத் தங்கவைப்பதற்காக அறைகளை வாடகைக்கு வழங்கி, தங்கிய நேரத்தைக் கணக்கிட்டுக் காசு ஈட்டும் துறையும், விடுதித் தொழிலாக (Loading Industry) ஐரோப்பியரால் விரிவாக்கப்பெற்றது. இவ் இரண்டும் தமிழர் மரபிற்கு எதிரானவை. களைத்து வரும் எவருக்கும், அறிமுகமே ஆகாதவருக்கும்கூட உணவளிக்க வேண்டும். அதுவே தமிழர் விருந்தோம்பல் முறை.

பெரியபுராணத்தில் வரும் சிவனடியார்கள், வீட்டிற்கு வந்து பெற்றோர்களிடம் அவர்கள் பெற்ற குழந்தைக் கறி வேண்டுமென்று கேட்டதும், அதன்படியே பெற்றோர்கள் தம் குழந்தையை அரிவாளால் வெட்டிக் குழந்தைக் கறி உணவு சமைத்துப் பரிமாறியதும் போற்றத் தக்க செய்திகளாகக் குறிக்கப்பெற்றுள்ளன. அறிமுகமே இல்லாமல் பசிக்கிறது என்று வந்த ஒரு சிவனடியார்க்கு உணவையும் அளித்து, கணவன், தனக்கு என வாங்கி வைத்திருந்த மாம்பழங்களையும் பரிமாறி

கணவனின் அன்பையே இழந்த காரைக்கால் அம்மையார் வரலாறும் இதனை வற்புறுத்தும். அறியப் பெறாதவராக இருந்தாலும், விருந்தோம்ப வேண்டும். பதிலுக்கு எதுவும் பெறுதல் கூடாது. இவ்வெண்ணத்திலேயே சில நூற்றாண்டுகளுக்கு முன்பு வரை தமிழகம் முழுதும் எங்கும் சாலைகளில் சத்திரங்கள், இலவச உணவு தருவதற்காகவே நிறுவப்பட்டு நிர்வகிக்கப்பட்டு வந்தன. அதுபோலவே நெடுந்தொலைவுப் பயணிகள் இலவசமாகத் தங்கிச் செல்ல ஆங்காங்கே சாவடிகள் அமைக்கப் பெற்றிருந்தன. தமிழர் வீடுகள் அனைத்திலும் முகப்பில் வலப்பக்கமும், இடப்பக்கமும் வந்தோர் அமரவும், படுக்கவும், தூங்கவும் வசதியாகத் திண்ணைகள் அமைக்கப்பட்டிருந்தன. ஆக, தமிழர் உணவளிப்பது, தங்கவைப்பது ஆகியவற்றை இலவசமாகச் செய்யவேண்டிய சேவைகளாகவே (Free Services) கருதி வந்தனர். தமிழர்தம் இப்பெருந்தன்மையே அயலார்க்கு இடம் அளித்தது. அயலாரைக் காலப்போக்கில் ஆளும் எசமானர் ஆக்கிற்று; தமிழரை அடிமை ஆக்கிற்று. அதுபோலவே கல்வியையும், குரு சீடனுக்குக் கற்பிக்க வேண்டும். கல்வி கற்பிப்பகதற்காக சீடனிடமிருந்து தனிச் சம்பளம் எதுவும் வாங்குதல் கூடாது. அது பாவம் என்று கருதப்பட்டது.

கல்வி வழங்குதலை நிறுவனமாகவும், வணிகமாகவும் மாற்றி உள்ள இன்றைய (ஐரோப்பிய/அமெரிக்கப்) பின்னணியை வைத்துப் பார்த்தால் முன்னைய தமிழருடைய மரபின் அருமை புலப்படும். இவற்றிலிருந்து தமிழர் உணவளித்தல், தங்கவைத்தல், கல்வியளித்தல் முதலானவற்றை வாணிகமாகவோ, தொழிலாகவோ செய்யவில்லை. அவற்றைத் தொண்டுகளாகவே செய்து வந்தனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. இவற்றின் விரிவாக்கமாக எந்தச் சிறந்த கருத்தையும், சந்தைப்படுத்துவது தமிழர் மரபு அன்று என்பது புலப்படும். இவ் அடிப்படையில்தான் சித்தர் பாடல்கள் அனைத்தும் அமைந்துள்ளன. திருமந்திரம் திருமூலரால் பாடப்பெற்றது. யாருக்கும் அவை போதிக்கப்படவில்லை. சந்தைப்படுத்தப்படவில்லை. (Marketing) வணிகப்படுத்தப்பட வில்லை (Commercialise). இதே மரபு திருவள்ளுவரின் திருக்குறளுக்கும் பொருந்தும்.

(தொடரும்)



# அருளாலய அஞ்சல் தலை

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி - 9)

யார்யார்க்கோ எவரெவர்க்கோ நடுவண் ஆட்சி
எடுத்தளிக்கும் சிறப்பஞ்சல் தலையைப் போலப்
பார்போற்றும் சமுதாய முனிவ ரான
பசுந்தமிழ்வாழ் குன்றக்குடி அடிக ளார்க்கும்
சீர்பெரிய அஞ்சல்தலை வேண்டும் என்ற
சிறப்பான கோரிக்கை தன்னை, இங்கே
தேர்பெரிய திருவாரூர்க் கலைஞர் போன்ற
தெளிதமிழின் சான்றோர்முன் வைக்கின் றேனே!

அஞ்சல்தலை வெளியிடுதற் கான அந்த
அசலான விதிமுறையை அறியேன்! ஆனால்
விஞ்சுபுகழ் சாதனையைப் புரிந்தோர்க் கென்றும்
வித்தகமாய் நூற்றாண்டு கண்டோர்க் கென்றும்
மஞ்சுதவழ் சிகரத்தைத் தொட்டோர்க் கென்றும்
மதிப்புயர்ந்த அரசியலில் சிறந்தோர்க் கென்றும்
நெஞ்சுவக்கும் சிறப்பஞ்சல் தலையைச் செய்யும்
நெடுங்கால வழக்கத்தை அறிவேன் நானே!

அந்தவகை வரிசையிலே அடிக ளாரும்
அனைத்திற்கும் பொருத்தமுற வாழ்ந்தார்! என்ற
சொந்தத்தை அறியாதார் உண்டோ? என்று
சொன்னாலும் சொல்வற்றும்! சொல்லா விட்டால்
பந்தமுறும் பாசத்தால் பொருளும் வற்றும்!
பன்னூறாய் ஆயிரமாய் விரிவ தாலே
எந்தவிதம் நான்சொல்ல இயலும்? என்றே
என்மனதில் பட்டதனை இயம்பக் கேண்மின்!

நடுத்திட்டு நல்லவிதை நாற்றங் காலாய்
நல்தரும புரம்விட்டு நட்ட போது
நடுநாட்டின் தலமான அண்ணா மலையின்
நற்பெயரை உடன்கொண்ட குன்றக் குடியின்
நடுவிடமாம் திருமடத்தின் அதிப ராக
நயந்தங்கே அருளாட்சி கொள்ள நாளும்
நடுநிலையாய் ஆதினந்தான் ஏற்றங் காண
நடப்பினிலே பலமாற்றம் செய்தா ரம்மா!

ஒருபானை சோற்றுக்கே ஒருசோ றாக
உலகறியச் செய்திட்ட ஒன்றைச் சொல்வேன்!
அருங்கடல்சேர் மண்டைக்கா டதனில் தானே
அவரவரும் மதவெறியால் அரிவாள் கொண்டு
குருதிவெள்ளச் சுடுகாடாய் ஆக்குங் காலை,
குருவேதுணை என்பதற்கோர் எடுத்துக் காட்டாய்
இருகாலால் நவகாளி நடந்த அந்த
இரும்புமனக் காந்தியைப்போல் நடந்தா ரன்றோ!

இன்னுமொரு காட்டதனைக் கூற வேண்டின்
இருமூன்று முகமுடைய செவ்வேள் வாழும்
பொன்னான குன்றக்குடி கிராமந் தன்னைப்
பொலிவான மாதிரிநல் கிராமம் என்ற
உன்னதத்தை விஞ்ஞானப் பார்வை யாலே
உயர்த்திட்ட செயலுக்கிங் கிணைதான் உண்டோ?
இன்னவகை யாய்அடிகள் செய்த தைப்போல்
எவர்செய்தார்? என்றிட்டால் இல்லை தானே!

ஆதலினால் அடிகளைத்தான் அறியார் யாரே?
அவர்வாழ்வும் அவர்தொண்டும் ஆத வன்போல்
பேதமின்றிப் பேரொளியாய் இருப்ப தாலே
பெரியமனம் படைத்தவர்கள் மனம்வைத் தேதான்
ஓதுவித மாய்சொன்னால் நடுவண் ஆட்சி
ஒருக்காலும் மறுக்காமல் உடனே செய்ய
ஈதுநல்ல சமயமென எண்ணி. அஞ்சல்
இருந்தலையை வெளியிடுதல் உண்மை யாமே!

என்றேநான் கவிஎழுதி முடிக்கும் வேளை
யாரோஎன் முதுகினையே தட்டி. அன்ப!
ஒன்றுரைக்க விழைகின்றேன் கேளும் என்றே
ஒருபோதும் அஞ்சல்தலை போல எந்த
ஒன்றையுமே விரும்பாமல் கடமை தன்னை
ஒருமைப்பாட் டுணர்வுடனே மக்கட் காக
நன்றுசெய வேண்டுமென்ற எண்ண மின்றி
நயந்தெதையும் பாராமைக்(கு) ஒன்று சொன்னார்!

தன்மகனைத் தேர்க்காலில் இட்ட போது
தயவுடனே ஈசனவன் வருவான் என்று
முன்னவனாம் மனுநீதி நினைத்தா னில்லை!
முன்வந்து தன்கடமை ஆற்றும் போது.
அன்னவனின் அரசியலை அங்கீ கரிக்க
அரனவன்தான் தானாக வந்தான்! அந்த
மன்னவன்போல் மாக்கடமை கருதிச் செய்தால்
மகேசன்போல் மக்களுமே நினைப்பா ரென்றார்!

இயல்பான மனுநீதிக் கதையைப் போல
இருக்கின்ற சைவசமய அடியார் செய்த
செயற்கரிய செயலுக்குப் பின்னர் தானே
செம்மேனி யம்மானும் வெளிப்பட் டங்கே
வியந்தவனும் வீடுபேற்றைத் தந்தா னென்று
வியக்கின்ற திருத்தொண்டர் புராணம் கூறும்
நயப்பதனை நல்லோர்கள் எண்ணிப் பார்த்தால்
நமதுதொண்டில் எதிர்பார்ப்பிற் கிடமே இல்லை!

என்றவரும் சொன்னதின்பின் திரும்பிப் பார்த்தேன்!
இருள்நிறைந்த அமாவாசை இருட்டில் தானும்
நின்றொளிரும் மின்னலைப்போல் அடிக ளாரும்
நிமிடத்தில் கண்ணுக்குள் கரைந்து போக.
அன்றிரவு கண்டகனா கூறி விட்டேன்!
அருளாலய அடிகட்கும் அஞ்சல் தலையை
நன்றின்றே பரிந்துரைக்கச் செய்யும் அந்த
நல்லோர்க்கு நன்றியுடன் வணக்கம் தானே!

# "அடிகள் முன்னர் யான் அடி வீழ்ந்தேன்" - 8

**(மு. பழனிஇராகுலதாசன்)**

திருமடத்தின் மேல்நிலைப்பள்ளியில் ஆண்டுவிழா. கருத்தரங்கு ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. கவிஞர் பரமகுரு அவர்கள் கருத்தரங்கில் நான் பங்கேற்க வேண்டும் என்றும் "சாமியின் உத்தரவு ஆச்சு" என்றும் தெரிவித்தார்கள். நிகழ்ச்சிகள் அதிகமாக இருந்தன. எனவே ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் நேரம் குறைவாக வரையறுக்கப்பட்டன. விழாவிற்கு தவத்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமை ஏற்று நடத்தினார்கள். நிகழ்ச்சிகள் முடிந்து, சர்க்கரைப் பொங்கலோடு கூடிய இனிய சிற்றுண்டியும் முடிந்தது. அடிகள் புறப்படும் நேரம். "இங்கிருந்து மடம் வரைக்கும் போக வண்டி வரும், அதிலே எல்லாரும் வாங்க" என்று பணித்துவிட்டுப் புறப்பட்டார்கள்.

வண்டிக்காகக் காத்திருந்தோம். அந்தக் கால அவகாச இடைவெளியில் அங்கு விழாப்பணியில் ஈடுபட்டிருந்த எட்டாம் வகுப்பு மாணவன் ஒருவனை அழைத்து அவனுடன் சிறிது உரையாடினேன். "எனக்கு ஓவியங்கள் வரைவதில் மிகுந்த விருப்பம்; நிறைய வரைந்து வைத்திருக்கிறேன்" என்றான். எனக்கும் ஓவியம் வரைவதில் விருப்பமும் பயிற்சியும் உண்டு. "ஓவியர் ஓவியர்பால" என்பதுபோல நான் அந்தப் பையனுடன் ஒட்டிக்கொண்டேன். "நீ வரைந்த ஒரு படத்தை எனக்கு அனுப்புகிறாயா?" என்று கேட்டு என் முகவரியைக் கொடுத்தேன். அதற்குள் வண்டி வந்துவிட்டது, புறப்பட்டேன்.

சில தினங்களுக்குள் என் கல்லூரி முகவரிக்கு அந்தப் பையன் தான் வரைந்திருந்த பண்டித நேருஜியின் படத்தை எனக்கு அனுப்பியிருந்தான். படம் வெகு சிறப்பாக இருந்தது. காந்திக் குல்லாயும் தொலைநோக்குப் பார்வையும், ரோஜா பூத்திருக்கும் "கோட்" சட்டையுமாக நேருஜியின் படம் மிகவும் உயிர்ப்புடன் இருந்தது. உடனே அவனைப் பாராட்டி ஒரு கடிதம் எழுதி, அன்பளிப்பாக நேரு வாழ்க்கை வரலாறு நூலும் அஞ்சல்மூலம் அவனுக்கு அனுப்பிவைத்தேன்.

இந்த நிகழ்ச்சிகள் நடந்து பலமாதங்கள் கழிந்துபோனபிறகு, மடத்திலிருந்து கவிஞர் பரமகுரு அவர்கள் "கூட்டுறவு விழா - எளிய முறையில் ஏற்பாடு, சாமி உத்தரவு ஆச்சு, வருக" என்று அழைப்பு விடுத்தார்கள். சென்றேன். விழா நிகழ்ச்சிகள் மடத்திற்குள் விழா மண்டபத்தில் எளிய முறையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. சிறப்புப் பேச்சாளர்கள் இராமசாமி தமிழ்க்கல்லூரிப் பேராசிரியர் நா.சுப்பிரமணியன் அவர்களும் நானும்தான். தலைமை தவத்திரு குருமகாசந்நிதானம் அவர்கள். விழா மேடைக்கு அருகில் அமர்ந்திருந்தபோது, மடத்தின் பணியாளர் ஒருவர் அருகிலே வந்து "உங்களை சாமி மேலே வரச் சொல்லுது" என்று தெரிவித்தார். விழா தொடங்கும் நேரம் நெருங்கிவிட்டது. மேலே இருந்து அடிகள் வந்ததும் தொடங்கப்பட்டுவிடும். எல்லாம் தயாராக இருக்கிறது. இந்த நெருக்கடியில் அடிகளின் அழைப்பு என்றதும் மனத்துக்குள் சிறிது பயம் சூழ்ந்தது. என்னவாக இருக்கும் என்று ஊகிக்க நேரமும் இல்லை; தெளிவும் இல்லை. "சட்" என்று எழுந்து "பரபர" என்று மேலே விரைந்தேன். அடிகள் முன்னர் பணிந்து வணங்கினேன். ஏதேனும் கடுமையான செய்தியாக இருக்குமோ, விமர்சனமாக இருக்குமோ என்று சதுரம் சிறிது வியர்க்க நடுக்கம் ஏற்பட்டது.

விழாமேடைக்காக அடிகளும் புறப்பாட்டு முயற்சிகளில் ஈடுபட்ட வண்ணம் இருந்தார்கள். என்னைப் பார்த்ததும் "வேறு ஒன்றுமில்லை, நம்ம பள்ளிக்கூடத்துப் பையனுக்கு கடிதம் எழுதி பரிசாக ஒரு புத்தகம் அனுப்பியதாக சொன்னார்கள்...." என்று மிருதுவான குரலில் பேசினார்கள்.

எனக்கு அச்சம், பயம் எல்லாம் நீங்கிவிட்டன. எனினும் அப்படி அந்தப் பையனுக்கு நேரடியாக அனுப்பியதை அடிகள் தவறாகக் கருதுகிறார்களோ? என்ற ஐயம் எழுந்தது. தலைமை ஆசிரியர், அல்லது வகுப்பு ஆசிரியர் வழியேதானே ஒரு மாணவனுடன் தொடர்பு கொள்ள வேண்டும்? அதுதானே முறை! என்று அடிகள் கருதி, அதைச் சுட்டிக் காட்டுகிறார்களோ என்று மனம் சிறிது பதைபதைத்தது.

"ஆமாம் சாமி!" என்றேன்.

"அந்தப் பையன் நல்ல ஓவியன் என்று தலைமையாசிரியர் சொன்னார். நேரடியாகக் கடிதம் எழுதி ஒரு புத்தகமும் அனுப்பியதாகச் சொன்னார்"

விஷயம் என்ன என்று தெரிந்து கொண்ட அடிகள் அடுத்து என்ன சொல்லப் போகிறார்களோ என்று ஆர்வம் மேலிட்டது. அச்சமும் உடன் மேல் எழுந்தது.

"அடுத்த தலைமுறை பற்றி நாம் ரொம்பவும் கவனம் எடுத்துக் கொள்ள வேண்டும். அந்தப் பையனுக்குக் கடிதம் எழுதி, பரிசு நூலும் அனுப்பியது குறித்து மகிழ்ச்சி... அதை இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாம்..." என்றார்கள் குருமகாசந்நிதானம்.

நான் மௌனமாக, நெஞ்சு களமாகக் கேட்ட வண்ணம் நின்று கொண்டிருந்தேன். அடிகள் தொடர்ந்து சொன்னார்கள் :

"எனக்குச் செய்தி தெரிவித்து எனக்கு அனுப்பியிருந்தால் ஒரு விழா மேடையிலேயே அவனுக்கு பரிசை அளித்துப் பாராட்டியிருக்கலாம். அது அவனுக்கு பெரிய ஊக்கமாக மகிழ்ச்சி தருவதாக இருந்திருக்கும்"

அப்பாடா, அச்சம், பயம் எல்லாம் தீர்ந்து மறைந்தன! மிகவும் சாதாரண நிகழ்ச்சிதான்! எனினும் அதை உள்வாங்கி, இளைய பாரதத்தை எப்படியெல்லாம் உருவாக்க வேண்டும் என்று எப்போதும் தொலைநோக்குப் பார்வையிலேயே சிந்தித்துக் கொண்டிருந்த அந்தத் தூய சிந்தையை இப்போதும் நினைத்து நினைத்து நெகிழ்கின்றேன், வணங்குகிறேன்!

திருக்குறள் தோன்றிய நாடு நமது தமிழ்நாடு என்ற பெருமை மட்டும் நமக்குப் போதாது. குறள்நெறி நடைமுறையில் உள்ள நாடு என்ற பெருமையை நாம் உண்டாக்க வேண்டும்.

**- அருள்நெறித் தந்தை**

# பொறிமயில் தூதின் பலபரிமாணம்

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி)

பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து என்ற குமரகுருபரரின் தெய்வ வாக்கிற்கு ஒருசிலரே எடுத்துக்காட்டாவர். அச்சிலருள் ஒருவரே முதுபெரும் புலவர் மதிப்பிற்குரிய லால்குடி ப. அரங்கசாமி ஐயா ஆவார்கள். அவர்கள் தமது எண்பத்தைந்தாம் ஆண்டு அகவையின் கொண்டாட்டமாகத் தாம் பாடி அனுபவித்த குன்றக்குடி, "பொன்னம்பல அடிகளார் பொறிமயில் தூது" நூற்சிறப்பை விவரிப்பதே இக்கட்டுரையின் கருதுகோள்.

இந்நூலாசிரியர் தன்னேரில்லாத் தமிழகத் தமிழாசிரியர் கழகத் தேரைச் செதுக்கி உருவாக்கிய தமிழ்ச் சிற்பிகளுள் ஒருவராயிருந்து அதை ஆண்டுதோறும் சரியான தடத்தில் வடம்பிடித்திழுத்து சரியாக நிலைகுத்தச் செய்த அனுபவத்தைப் பதிவு செய்வார்போலப் "பூவாழி எனத் தொடங்கிப் பொன்னம்பல அடிகள் வாழி" என முடியும் தேர்ச்சித்திரக்கவி என்ற நூலின் முகப்புப் பாடலால் "அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே" என்ற சிவஞானபோத எட்டாம் நூற்பாவின் தொடர்ப் பொருளுக்கேற்பத் தவத்திரு அடிகளை அருந்தமிழும் அடிகளும் ஒருவரே எனக் கூறுவார் போலத் தமிழ்த் தேர்மீதேற்றித் தெய்வமாக வணங்குவது நெஞ்சைத் தொடுகிறது.

தூது என்ற சொல் ஓர் அரிதான அமைப்புடையது. நெட்டெழுத்தும் அதன் குறில் எழுத்தும் இணைந்ததான வேறொரு சொல் தமிழில் இல்லையென்ற பெருமையைப் போலத் தூது என்றதன் பொருளும் அருமைப்பாடான பெருமைக்குரியது. சாலையின் ஓடும் இயங்கிகளின் வேகத்தை மட்டுப்படுத்திச் சீராக்க உதவும் வேகத் தடையைப்போன்றது தூது. சினம் மிக்க மனவேகத்தை வாழ்க்கைச் சாலையில் கட்டுப்படுத்திச் சீராக்கும் விவேகத் தடைதான் அது. மேலும் அன்பால் துடிக்கும் காதல் தாகத்தைத் தணிவிக்கும் மந்திரசக்தி வாய்ந்த மாமருந்தாகும். இவற்றுள் மனோ வேகத்தைக்கட்டுப்படுத்திச் சமாதானம் செய்வதைப் புறப்பொருளிலும் நெஞ்சத்தை அன்பால் ஒருங்கிணைக்கவல்லதை அகப்பொருளிலும் காணலாம். இந்த வகையில் இந்நூல் அகமரபின் அடிப்படையில் சில புதுமைகளுடன் பாடப்பட்ட ஒன்றாகும்.

அகமரபின்படித் தூது விடுவோர் தம்மைப் பெண்ணாகப் பாவித்துக்கொள்வர். ஆனால் இந்நூலாசிரியர் அங்ஙனமின்றி ஆண் ஆணாகவே இருந்து ஓர் ஆணை அனுபவிக்கத் துடிப்பதுபோல் பாடியிருப்பது புதுமையாக உள்ளது. பாம்பறியும் பாம்பின்கால் என்பதைப்போல ஒரு பெண்ணின் மனம் இன்னொரு பெண்ணுக்குத்தான் தெரியும் என்பர். அக்கூற்றை மாற்றிக் கூறுவார்போல ஓர் ஆணின் மனம் மற்றோர் ஆணால் உணரமுடியும் என்பதைப் புதுக்குகிறார் முதுபெரும்புலவர்.

பால்பகா அஃறிணைப் பொருள்களைத் தூது விடுங்கால் பொதுவாக விளித்துக் கூறுவது மரபு. ஆனால் இந்நூலோ தோகை யில்லாத பெண்மயிலை விடுத்து தோகையுடைய ஆண்மயிலைத் தூதுவிடத் தேர்ந்தெடுத்ததாக வெளிப்படையாகக் கூறுவதோடு (10-14) தூதுவிடுவோர் "சீர்திகழ் அரங்க சாமிப் புலவர்" எனத் தம்மை (578) மயிலிடம் கூறுவதும் "குன்றைக் கோவிடம்" (434) தூது கூறு என்பதும் அகமரபில் புதுத் தடம் பதிப்பதாக உள்ளது. இப்புதுமைப் போக்கை இலக்கிய நயம்படக் கூறினால் "தூதுவிடப்படும் ஆண்மயில் என்ற திறவுகோலால் தூதுவிடும் ஆண்பாற்புலவரின் கருத்து என்ற பூட்டைத் திறக்கும்போது அங்கே அடிகள் என்ற அருந்தமிழ்த் தெய்வத்தைக் கண்டு இன்புறலாம்" எனலாம். இக்கருத்தை அறிவாகிய பொறிபுலனைத் தட்டிஎழுப்பும்போது இலக்கிய நயமாக அனுபவிக்கலாம் என்பதைப் "பொறிமயில்" என்ற தலைப்பே கூறாமல் கூறுகிறது என்பதாம்.

இந்நூல் பல்வேறு தமிழ் வரலாற்றுக் கூறுகளைக் கொண்டுள்ளது. குன்றக்குடி ஆதீன வரலாறு, அருள்நெறித்தந்தை வரலாறு, தவத்திரு பொன்னம்பலர் வரலாறு, மாதிரி கிராம குன்றக்குடி வரலாறு எனப் பல வரலாற்றுப் பதிவுகள் தமிழ் இலக்கிய வரலாற்றுக்கான புது வரவுகளாகும். மண்டைக்காட்டுக் கலவர நிலவரம், மேலவை உறுப்பினரான ஒரு மடாதிபதி, ஆழிப்பேரலை யழிவின் போது நாகையில் நடந்த பொன்னம்பலக் கால்கள் போன்ற செய்திகள் மானுடத்தை நெருடிய குன்றக்குடி மடாலய உபதேச வரலாறுகளாகும்.

உருவத் தோற்றத்தாலும் ஆடும் ஆட்டத்தாலும் மயக்கும் மயிலை நூலாசிரியர் தூதுவிடத் தேர்ந்தெடுத்தாலும் திட்டமிட்டே அதைத் தேர்ந்தார் எனக் கூறும்படியாக நூலாசிரியரின் பாடல் வரிகள் சுவையாக அமைந்துள்ளன.

*செந்தமிழ்க் கடவுள் செவ்வேள் முருகன்*
*உந்தனைத் தனக்கே ஊர்தியாய்க் கொண்டனன் (33-4)*
என மயிலைத் தொடக்கத்தில் பாராட்டுகிறார் புலவர். அவரே இறுதியில்,

*செவ்வேள் ஊர்திச் சிறப்பும் உணர்ந்து*
*அடிகள் உன்னை அன்புடன் ஏற்பார் (413)*

என்கிறார். இவ்விரண்டும் ஒருபொருளுடையதன்று. முருகன் மயிலை விரும்பினான் என்பது முதலில் கூறப்பட்டது. அம்முருகன் விரும்பிய மயிலை அடிகள் விரும்புவார் என்று இரண்டாவதாகக் கூறப்பட்டது. இவ்விரண்டில் பின்னதே சிறப்பு. தாம் வழிபடுவோனைத் தாங்கும் சிறப்பால் மயில் அடிகளிடம் மதிப்பைப் பெறுகிறது. இதனை நுட்பமாக உணரும் நூலாசிரியர் மயிலைத் திட்டமிட்டே தூதுக்குரியதாகத் தேர்ந்தார் எனலாம்.

பிறவற்றைத் தூதனுப்புங்கால் அடிகள் சற்றுப் பாராமுகமாகக் காலந் தாழ்த்தலாம். மயில் தூதாக வந்துள்ளதென்றால் அது முருகனுடையதாயிற்றே! அதைப் பாராமுகமாகப் பார்க்காமல் இருந்தால் முருகன் கோபிக்கவும் கூடும் என்பதால் அதனை உடனே வரவேற்று ஆதரிப்பார் என்பதே நூலாசிரியரின் நுட்பமாகும். அதாவது புலவராக மயிலைத் தூதனுப்பியிருந்தாலும் அம்மயிலை முருகனுக்குரியதாகப் புலவர் தூதனுப்பியதால் அடிகள், முருகனைப் போலவே புலவரிடத்தும் அன்பால் அருளால் நெகிழவேண்டியதாயிற்று. எனவே அடிகளிடம் அனுப்பும் தூதை முருகனுக்குரியதாகத் தேர்ந்தெடுத்ததால் புலவரின் சதுரப்பாடு, எத்தூதுப் புலவர்க்கும் கிட்டாத புகழ்ச் சிகரத்தைத் தொடுவதாயிற்று.

உவமையும் கற்பனையும் கவிதையின் இரு சிறகுகள். இந்நூலுள் அங்கும் இங்குமாகக் கூறும் உவமையினும் கற்பனைகளே மிகுதியாகும். அடிகள் பற்றிய அடையாளங்களுள் திருவடி பற்றிக் கூறுங்கால் "எட்டுத் திசையும் தொண்டுகள் செய்ய கட்டவிழ்த்திட்டுச் சுழலும் கால்கள் (419) என்றதற்குப் பம்பரம் சுழற்றும் சுழற்சியை வென்றதாகக் (465) கூறும் உவமை மனங்கொளத் தக்கதாக உள்ளது.

மயிலைத் தவிர்த்த பிற பறவைகள் தூதுசெல்ல, சொல்ல தகுதியற்றன என்பதைக் கூறும்போது கற்பனைகள் வாரி இறைக்கப்பட்டுள்ளன. கிளி போனால் மீனாட்சியம்மன் கையில் உள்ள கிளியோடு இங்கிதம் பேசி இனத்தோடு இனம் சேர்ந்து விடுமாம். மென்மையான இடங்களில் நடந்து பழகிய அன்னம் குன்றக்குடி பாறை மீது நடந்து செல்லத் துன்பப்படும்போது தூதுசொல்ல மறந்திடுமாம். குயிலோ, தேன்போல் பேசும் அடிகளின் குரல்கேட்டுப் பின்வாங்கிச்

சென்றிடுமாம். அடிகளின் திருச்செவிகள் திருமுறைகளைக் கேட்டுக்கொண்டே, இருப்பதால் வண்டு தூது சொல்ல நேரம் கிடைக்காமல் திண்டாடுமாம். மேகமோ அடிகளின் சொல்மழை கண்டு நாணி மலையில் போய் முடங்கிவிடுமாம். அடிகளின் வேகநடைப் பயிற்சியைக் கண்டு துள்ளும் மான் பிந்துமாம். இவற்றிற்கெல்லாம் மேலாக நெஞ்சமோ, அடிகள்தம் நெஞ்சில் இறைவனைக் குடியேறச் செய்து விட்டதால் அந்த இடத்தில் இன்னொரு பொருள் இருக்க முடியாதென்ற காரணத்தால் தூது செல்லாமல் திரும்பிவிடுமாம் எனக் கூறும் கற்பனை சிகரமானதாக உள்ளது.

இப்படியெல்லாம் அமுதத் தமிழால் அடிகளை அனுபவிக்கும் புலவர் குன்றக்குடித் திருமடத்தின் மரபுகளை நன்குணர்ந்தவர் என்ற உண்மையைப் பல இடங்களில் பதிவு செய்கிறார். அடிகளாரைக் கண்டதும், "பார்பட அடியவர் விழுந்து வணங்கும் பாதம்" (429) எனக் கூறுவதும் அவர்கள் திருநீறு தரும்போது பணிந்து தொழுது ஆனந்தக் கண்ணீர் துளிர்க்கப்பெற்றுக்கொள்ள வேண்டும் எனக் கூறுவதும் மடாலயத்தில் அடக்க ஒடுக்கமாக நடந்துகொள்ள வேண்டும் என்பதாக மயிலுக்குக் கூறுவதும் எல்லாம் மடாலய மரபுகளாகும்.

தூதுவிடுவோர் தம் கருத்தை மட்டுமே சொல்லி அனுப்புவதாகப் பாடுவது வழக்கம். தூது போனபொருள் வந்து சொன்னதாகப் பாடுவதில்லை. இந்த மரபில் இந்நூல் முடிந்தாலும் புதிதாக ஒரு செய்தியைக் கூறுவது இந்நூலுக்கே உரிய தனிச்சிறப்பாக உள்ளது.

அடிகளிடம் தூது சென்று செய்தியைக் கூறி வருதலோடு அவரிடமிருந்து அக்கமணிசேர் அரும்பொன்மாலையைப் பெற்று வரும்படிப் புலவர் கூறுகிறார். கேட்டனுப்பும் இலக்கிய ஐயங்களைப் பிறரிடங்கூடக் கேட்டு வந்து விடலாம். ஆனால் அவை அடிகளிடமே கேட்டறியப்பட்டன என்றதற்கான அடையாளத்தைச் சோதித்தறிய புலவர் வேறு எவரிடமும் இல்லாத அக்கமணி மாலையை, அதுவும் பொன்னாலான மாலையை எவரிடமும் பெற்றுவர முடியாததலால் அடிகளிடமே மயில் சென்றுவர வேண்டிய காட்டாயத்தை உருவாக்கியது இந்நூலுக்கே உரிய தனிச்சிறப்பாகும்.

கட்டுரையின் நிறைவாக ஒன்றைக் குறிப்பிடவேண்டும். அதுதான் தூதுரைக்கும் பொருள். திருக்குறள் நான்கிற்கும் திருவாசகப் பாடல் ஒன்றற்கும் விளக்கம் கேட்டுவரச் சொன்னதாகக் கூறவதோடு மற்றும்,

*பெருந்தவ முனிவர் முன்னாள் நிறுவிய*
*திருப்புத் தூர்த் தமிழ்ச் சங்கம் தொடரவும்*
*கற்புடைத் தமிழ்ப்புலம் காழ்கொண் டார்க்குப்*
*பொற்கிழி வழங்கிப் போற்றிய அறமும்*
*அடிகள் அருள்மனம் கொண்டு தொடர்தல்*
*வேண்டும் என்ற விழைவும் சொல்லி வருகென*
*(602 - 607)*

என்ற கருத்துதான் தூதின் உயிர்த்துடிப்புள்ள பகுதியாகும். தருமிக்குப் பொற்கிழி கொடுத்தது மதுரையில் நடந்தாலும் அதுபற்றிய இலக்கியத் தளம் பதித்த இடம் திருத்தளிநாதர் கோயில் திருப்புத்தூர் என்பதால் அருள்நெறித்தந்தை தமிழ்ச்சங்கம் நிறுவி பொற்கிழிப்போட்டி நடத்தியதைப் பொன்னம்பல அடிகள் புதுப்பித்துப் பொலிவிக்க வேண்டும் என்ற புலவரின் ஆதங்கமே தூதின் செம்பொருள்.

இக்கருத்தைக் கூறவே குறளையும் வாசகத்தையும் துணையாகக் கொண்டார் நூலாசிரியர். இவ்விரு நூல்களில் தான் புலவருக்கு ஐயமா? வேறு நூல்களில் இல்லையா? எனச் சிந்தித்தாலும் ஒரு பொருள் பொருத்தம் உள்ளதை உணரலாம். "திருக்குறளே நமது பொதுமறை! திருமுறைகளே நமது மறை" என்பது திருமடத்தின் குறிக்கோள் (Motto) இதை உறுதிப்படுத்துவார்போல இவ்விரு நூல்கள் கொள்ளப்பட்டன.

இருப்பினும் தூதுப்பொருளைச் சுற்றி வளைத்துக் கூறவும் ஒரு காரணம் உண்டு. பலரும் கூடியுள்ள பொது இடத்தில் உள்ள தன் காதலியைக் கண்ட காதலன் அவளை மட்டும் பார்க்காமல் எல்லோரையும் பார்ப்பதுபோல் பொதுவாகப் பார்ப்பானாம். இது வள்ளுவம் கூறும் ஓர் அகப்பொருள் செய்தி.

*ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்*
*காதலர் கண்ணே யுள. (1099)*

எனவே இலக்கியத்திற்கு ஐயம் கேட்டறிவதுபோலத் திருப்புத்தூர் விழாவைப் புதுப்பிக்கச் செய்ய நினைவூட்டுவதே கருத்தாதலின் புலவரின் ஆதங்கம் தேசியப் பறவையாம் மயில் மூலம் தேசியமயமாயிற்று எனலாம்.

எனவே அரங்கனை ஆண்டாள் அனுபவித்ததுபோல அடிகளை அய்யா அரங்கசாமி அவர்கள் அனுபவித்த ஞானச்சிதறலே இப்பொறிமயில் தூதாம். கற்போர் பொறிபுலன்களையும் அங்ஙனம் அனுபவிக்கச் செய்வதால் அவரவர் பொறிபுலனே மயிலாய் அடிகளிடம் தூது சென்று அனுபவிக்கும் என்பதில் ஐயமில்லை.

ஃஃஃ

# அறிவாற்றலும் செயலாற்றலும் இணைந்த சைவசித்தாந்தப் பேராசிரியர்

## முனைவர் இராம. கருணாநிதிச் செட்டியாருக்கு தவத்திரு பொன்னம்பல அடிகள் பாராட்டுரை

தேவகோட்டைத் திருநகரில் பிறந்தவரும், இப்போது சிங்கப்பூரில் வாழ்பவருமான முனைவர் பேராசிரியர். இராம.கருணாநிதிச் செட்டியார் அவர்களுக்கு, அவர்களுடைய சைவசித்தாந்த, பன்னிரு திருமுறைப் பணிகளைப் பாராட்டி, தேவைகோட்டை நகர ஞானதான சபையின் சார்பில் "திருமுறைக்குருமணி" என்ற பட்டம் 3.11.05ஆம் நாள் வழங்கப்பட்டது. தேவகோட்டை நகரச் சிவன் கோவிலில் மகாமந்திர உபதேச மண்டபத்தில் நடைபெற்ற சிறப்புமிகு விழாவில் தவத்திரு பொன்னம்பல அடிகளார் பங்கேற்று, திருமடத்தின் சார்பில் வாழ்த்துக்களும் பாராட்டுதல்களும் வழங்கி, பொன்னாடை அணிவித்து "திருமுறைக்குருமணி" என்ற சிறப்புப் பட்டத்தையும் வழங்கினார்கள். ஞானதான சபையின் நிறுவுநர் திரு. செட்டியப்பன் தலைமை ஏற்றார். கவிஞர் அகஸ்தீஸ் மு. உடையப்பன் விழா நிகழ்ச்சிகளை தொகுத்து வழங்கினார். அவ்வமயம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் ஆற்றிய பாராட்டுரையின் சில பகுதிகள் வருமாறு :

பல்வேறு நெருக்கடிகளில், வேலைப்பளுவுக்கு இடையில், இந்த விழாவுக்கு வருகைதர நேர்ந்தது மிகவும் மகிழ்ச்சியைத் தருகிறது. சஷ்டி விரத காலத்தின்போது தேவகோட்டை நிகழ்ச்சியில் மட்டுமே நாம் பங்கேற்பது என்பது திருமடத்தின் மரபு ஆகும். அந்த வகையில் இன்று மாலை இந்தப் பாராட்டு நிகழ்ச்சியும், இரவு கந்தர் சஷ்டி விழாவில் சிந்தனை மேடை நிகழ்ச்சியும் அமைகின்றன. முனைவர்.பேராசிரியர்.இராம. கருணாநிதி அவர்களுக்கு நடைபெறும் இந்தப் பட்டம் அளிப்பு பாராட்டு நிகழ்ச்சியில் சைவப்பெருமக்கள்

மண்டபம் நிறைந்து கூடியுள்ளனர். நமக்கு மனமும் நிறைந்து மிக்க மகிழ்ச்சியாக இருக்கிறது. காரணம் தேவகோட்டை ஞானதானசபை தகுதிமிக்க சபை; அந்தச் சபை தகுதி சான்ற பெரியார் ஒருவருக்கு "திருமுறைக் குருமணி" என்ற சிறப்பான பட்டத்தை வழங்குகிறது என்பதுதான்.

அண்மையில் நாம் சிங்கப்பூர் சென்றிருந்தோம். அழைப்பும் நிகழ்ச்சிகள் அமைப்பும் மிகக் குறுகிய காலத்தில் ஒழுங்கமைவு செய்யப்பட்டன. அப்படிப்பட்ட குறுகிய அவகாச நிலையிலும், சிங்கப்பூரில் நமது கருணாநிதிச் செட்டியார் அவர்களும் திருமதி ஆச்சி அவர்களும் நேரில் வந்திருந்து வரவேற்பளித்துச் சிறப்புச் செய்தார்கள். திருமிகு செட்டியார் அவர்கள் பற்றி, அவர்கள் சிங்கப்பூரில் ஆற்றிவரும் சைவ சித்தாந்த, பன்னிருதிருமுறைப் பணிகள் பற்றி முழுமையாகவே நாம் அறிந்திருக்கிறோம். சைவமும் தமிழும் நமது நகரத்தார் பெருமக்களுக்கு இருகண்கள் போல்வன என்பது வரலாறு. நமது மதிப்பிற்குரிய நகரத்தார் பெருமக்கள் உலகின் எந்த இடத்தில், எந்தத் திசையில் இருந்தாலும் சைவநெறியையும், தமிழ் நெறியையும் தமது வாழ்வியல் கோட்பாடுகளாகக் கொண்டு, அவற்றை உயர்த்திப் பிடித்து வாழ்பவர்கள் ஆவர். அதற்கு ஒரு மிகச்சிறந்த எடுத்துக்காட்டு நமது கருணாநிதிச் செட்டியார் அவர்கள். அவர்கள் பெற்ற கல்வி, பெற்ற பட்டங்கள், சிங்கப்பூர் அரசு அளித்த விருதுகள், தொடர்ந்து வகித்து வரும் பொறுப்புக்கள் அனைத்தையும் பார்க்கும்போது அவர்களது "உலகளாவிய அறிவின் தேட்டம்" நமக்குப் புரிகிறது. தேடித்தேடி அவர்கள் பெற்ற அறிவுப் பெட்டகத்தை சமுதாயத்திற்கான செயல்பாடுகளாக மாற்றிப் பணிபுரிவதே மிகச் சிறப்பான அம்சம் ஆகும். சுருக்கமாகச் சொன்னால் "அறிவு" அவர்கள் கரங்களில் "கருவியாக" மாற்றம் பெற்றுச் செயல்புரிகிறது! அறிவு செயல்படுகிறது என்றால் அது "அன்பு" என்ற நிலையில் விரிவாக்கம் பெறுகிறது என்று பொருள். அது சமுதாயத்தைத் தழுவிக் கொள்கிறது என்று பொருள்.

கடந்த காலங்களில் புறச்சமயங்கள் ஆட்சி, அதிகாரம், அறிவு என்ற தளங்களில் மட்டுமே இயங்கி நமது சைவ மரபோடு முரண்பட்டபோது அன்பையும், அன்புமேவிய வாழ்வியலையும் நமது நாயன்மார்கள் உயர்த்திப் பிடித்தார்கள். சம்பந்தர் பெருமானும், நாவுக்கரசர் பெருமானும் பெரிய போராட்டங்களையே சந்திக்க

நேர்ந்தது. அதனுடைய தொடர்ச்சியாகத்தான் இன்று நம்முடைய பாராட்டுதலுக்குரிய கருணாநிதிச் செட்டியார் அவர்களும் சமுதாயச் சிக்கல்களை எடுத்துக்கொண்டு அவற்றுக்கான தீர்வுகளைக் கண்டறியப் பாடுபடுகிறார். சிங்கப்பூரில் பன்னிரு திருமுறைகளைப் பரப்புவதில் முன்னின்று செயல்படுகிறார். பன்னிரு திருமுறைகளையும் "முற்றோதுதல்" என்ற முறையில் நிகழ்த்திப் பூர்த்தி செய்திருக்கிறார். இன்றைய அவசர உலகில் ஏதேனும் ஒரு பாசுரத்தை ஓதுதல் என்பதே பெரிய காரியம். நமது ஞானதானசபை செய்துவருவது போல "திருவாசகம்" என்ற ஒரு நூலை "முற்றோதுதல்" நிகழ்ச்சி வழியே ஓதச்செய்து நிறைவு செய்தார்கள் என்றால் அது மிகவும் அரிய பணி ஆகும்.

திரு செட்டியாரவர்கள் ஆற்றிவரும் ஆன்மிகப் பணிகள் ஒருபுறம் இருக்க, அவர்கள் ஆற்றிவரும் கல்விப்பணிகள், சமுதாயப் பணிகள் ஆகியவை குறித்து நாம் மிகுந்த பெருமிதம் கொள்கிறோம். பல்வேறு சிக்கல்களில் அமிழ்ந்து மேடேறுதல் இல்லாத இந்த சமுதாயத்தைச் சீர்செய்து மீட்டுருவாக்கம் செய்ய வேண்டும். இன்று உலகம் எங்கும் இளைய சமுதாயத்தினரிடையே போதைப் பழக்கம் குடிகொண்டுவிட்டது! குடித்துக் குடித்து இன்றைய இளைஞர்கள் வாழ்க்கையைத் தொலைத்துத் திரிகின்றார்கள்! புதிய தலைமுறை, இளைய தலைமுறை கொஞ்சம் கொஞ்சமாக அழிந்து கொண்டிருக்கிறது! அவர்களை மீட்க வேண்டுமே! அவர்களுக்கு புனர்வாழ்வு தர வேண்டுமே! சைவமும் தமிழுமாய்ப் பணி ஆற்றிவரும் நமது கருணாநிதிச் செட்டியார் அவர்கள் மதுவால் வாழ்விழந்தோருக்குப் புது நெறிகாட்டும் அமைப்பும் ஒன்றை, சங்கம் ஒன்றை நடத்துகின்றார்கள்! இது மேன்மைமிக்க சமுதாயப் பணி என்று மனமாரப் பாராட்டுகின்றோம்!

இவ்வாறு கல்வியால், அறிவுத் தேடலால் மிக உயர்ந்த பட்டங்களையும், பதவிகளையும் பெற்று, வகித்து, ஆன்மிக, சமுதாயப் பணிகளை நம் தமிழகத்திலும், சிங்கப்பூர் மண்ணிலும் மிகச் சீரிய முறையில் ஆற்றிவரும் கருணாநிதிச் செட்டியார் அவர்களின் மனையறத் துணைவியார் திருமதி ஆச்சி அவர்களையும் நாம் பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம். திருமதி ஆச்சி அவர்களின் துணையும், இனிமை

மிகுந்த இசைவும் செட்டியார் அவர்களின் சமுதாயப் பணிகளுக்குத் தொடர்ந்து கிடைத்துவருகின்றன என்பதையும் அறிந்துகொள்கிறோம். திருமிகு செட்டியார் அவர்களும், திருமதி ஆச்சி அவர்களும், அவர்களுடைய குடும்பத்தார்களும், தொடர்ந்து ஆன்மிக, சமுதாயப் பணிகள் பலவும் ஆற்றிச் சிறந்தோங்குக என வாழ்த்துகிறோம்!

"திருமுறைக் குருமணி" முனைவர் இராம.கருணாநிதி அவர்கள் சிறிய ஏற்புரை நிகழ்த்திய பிறகு விழா இனிதே நிறைவுற்றது. ஏற்புரையின் போது இராம. கருணாநிதி அவர்கள், "தமிழ் வேதங்களாகிய திருமுறைகளை மாணவர்கள் கற்றுக்கொள்ளும் வண்ணம் கல்வித் திட்டங்கள் அமைய வேண்டும்" என்று கேட்டுக்கொண்டு, அதை வலியுறுத்திப் பேசினார்கள்.

-செய்தியாக்கம் : மு.மு



## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

- ஆசிரியர்



# சிந்தனை வட்டம்

"விறகில் தீயினன் பாலில்படு நெய் போல்

மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்"

எனும் அப்பர் பாடல் வரிகட்குப் பொருள் கொள்வதில் இருதிறத்தார் உளர்.

மக்கள் சிந்தனை இதழில் (2037. தை – சனவரி 2006) புலவர் ம. மணி எம்.ஏ..எம்.எட்., அவர்கள் தம் கருத்தாக ஒன்றை வைத்தார்கள்.

பாடலின் முதல் வரியை "விறகில் தீயில், நன்பாலில் படுநெய்போல்" எனக்கொண்டு "விறகில் தீயைப் போலவும் நல்ல பாலில் படும் நெய்யைப் போலவும் மாமணிச் சோதியான் மறைய நின்றுளான்" எனப் பொருள் கூறினார்கள். மாமணிச் சோதியான் எழுவாய், "மறைய நின்றுளான்" பயனிலை. இஃது அவர்கள் கருத்து. இஃது சிறந்த கருத்துதான்.

இனி இரண்டாவது கருத்து. "மாமணிச்சோதியான் விறகில் தீ மறைந்திருப்பது போல் மறைந்திருப்பவன், பாலில் படுநெய் போலவும் மறைய நின்றுளான்" என்பது. இதற்கு மாமணிச் சோதியான் எழுவாய். தீயினன், என்பதும், மறைய நின்றுளான் என்பதும் பயனிலைகள். தீயினன் என்பதற்குத் தீப்போல் மறைந்தவன் என்பது பொருள்.

தீப்போல் மறைந்தவன் என ஏன் கொள்ளவேண்டும். எனின் பின்னர் மறைய நின்றுளான் என வருதலினால் என்க. இக்கருத்தும் சிறந்ததே. சொற்றொடர்களையாளுவதில் தான் இவ்வேறுபாடு. கருத்து வேறுபாடு இல்லை.

"அமண்தெண்ணர் கற்பு" என்ற தலைப்பில் என் கட்டுரை மக்கள் சிந்தனை 2036 மார்கழி இதழில் வெளிவந்துள்ளது. அதில் "கற்பு" என்பது "கற்ற கல்வியால் கொள்ளும் வாதம்" எனப் பொருள் கொள்ளவேண்டும் என்று எழுதியுள்ளேன்? கற்பு என்பதற்குப் பதில் "கல்வி" என்று பாடியிருக்கலாமே என்ற எண்ணம் வரலாம். "தெண்ணர் கல்வியழிக்கத் திருவுள்ளமே" எனப் பாடியிருக்கலாமே என வினவலாம். பாடலைப் பாருங்கள்.

மண்ண கத்திலும் வானிலும் எங்குமாய்

திண்ண கத்திரு வாலவா யாய்அருள்

பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்

தெண்ணர் கற்பழிக் கத்திரு வுள்ளமே

பாடலின் இரண்டாம் சீர்கள் நேர்நிறையாகிய கூவிளச் சீர்கள். நேரசையானவை கத், கத், கத், கற் வல்லொற்றுக் கொண்டவையாகவுள்ளன. "கல்வியிழக்க" எனப்பாடம் கொண்டால் "கல்" எனும் நேரசை இடையொற்றாக விருந்து பாடல் ஓசையில் மாறுபடும். சீரும் மூவசைச் சீராகிவிடும். அதனால்தான் சம்பந்தர் "கல்வியழிக்க" என்னாமல் "கற்பழிக்க" என்றார்.

**-ஆ. சிவலிங்கனார்**, மயிலம்.

உ
சிவமயம்






பதிவு எண் : TN/SP/KKD-01/2006-2008 மக்கள் சிந்தனை பிப்ரவரி / 2006. வெளியீட்டு நாள் 20.2.2006






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர் - (Post)
காரைக்குடி - (Via)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166